'ஐவரை வெள்ளுேன் அடியிணை'
[—பொறி வாயிலைந் தவித்தான்—குறள்]

'தலைவன், பரமன், பெரியவன், செம்மல், சுயம்பு'
[—தனக்குவமையில்லாதான்—குறள்]

'அறவோன், தருமமுதல்வன், அருளறம் பூண்டோன்'
[—அறவாழி அந்தணன்—குறள்]

'பண்ணவன், எண்குணன்'—[எண்குணத்தான்—குறள்]

'திகழொளி இறைவன்—[இறைவன் பொருள்சேர்—குறள்]

'போதார்பிறவி பொதியறை யோரென, சிவகதிநாயகன்
[—பிறவிப் பெருங்கடல் நீந்துவர்—குறள்]

—சிலப்பதிகாரம்—நாடுகாண்காதை

இவ்வாறே திருக்குறள் வழிவந்த ஏனைய பேரிலக்கியங்களிலும் வடமொழி இலக்கியங்களிலும் பகவான் விருஷப தேவரை ஆதிபகவன், அறவாழிவேந்தன், எண்குணத்தான், பொறிவாயிலைந் தவித்தான், மலர்மிசை ஏகினன் எனப் போற்றி வாழ்த்துவதைக் காணலாம். கி. பி. 1763-இல் வாழ்ந்த வைதிக அந்தணர் மரபைச் சார்ந்த கயாதரர் என்னும் சிவபக்தர் ஒரு பெரும் புலவர். அவர் இயற்றிய கயாதர நிகண்டில் பகவான் விருஷப தேவருடைய சிறப்புப் பெயர்களை விளக்கும் கவியில்,

"கோதிலருகன் திகம்பர னெண்குணன் முக்குடையோன்
ஆதிபகவனசோக மர்ந்தோன் அறவாழியண்ணல்
சோதிமுனைவன் சினேந்திரன் பொன்னெயில் நாதன் சுத்தன்
போதிநடந் தோன்அதிசயன் சாந்த னற்புங் கவனே"

என நடுநிலையினின்றும் வழுவாது பாடியுள்ளார். இந்நிகண்டில் திருக்குறள் இறைவன் வாழ்த்துச் சிறப்புப் பெயர்களில் பெரும்பாலும் காணப்படுகின்றன.

இதினின்றும் கி. பி. பதினேழாம் நூற்ருண்டிலும் திருக்குறளில் காணும் இறைவன் வாழ்த்துப் பரிமேலழகர் கூறும் காணுத கடவுளைப் பற்றியதன்று யெனும் உண்மை வளர்ந்திருக்கிறது. மேலும் அக்காணுக் கடவுளைப் பற்றித் தமிழர்தம் திருமறையாய் விளங்கும் திருக்குறளிலும் அதன் வழி வந்த பேரிலக் கியங்களிலும் காணவியலாது. எனவே திருக்குறளாசிரியர் அக்கடவுளை நினைக்கவுமில்லை ; ஆதிபகவன் என அழைக்கவுமில்லை என்பது வெளிப்படை. அவ்வறவோரின் உள்ளக் கிடக்கையை,

" இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற் றியான் "

என்னும் குறட்பாவிலே விளக்கியுள்ளார். இவ்வுலகைப் படைத்துக் காத்து அழிக்கும் கடவுளை அச்சமின்றி வெறுக்கின்ருர். அவ்வாறு ஒரு கடவுள் இருப்பதாக அவருக்கு நம்பிக்கையுமில்லை. காணுத முழுமுதற் கடவுளைப் பற்றிக் கூறும் பல் வேறு நூல்களும் அக் கடவுளைப் பற்பல விதமாக வருணிக்கின்றன. சில வற்றில் கடவுளுக்குரிய பண்புகளையோ செயல்களையோ காணவியலவில்லை. எதை ஏற்பது எதைத் தள்ளுவது என்னும் ஐயம் எழுகின்றது. கடவுள் இவ்வுலகை ஏன் படைத்தார் ? எங்கிருந்து படைத்தார் ? எதைக் கொண்டு படைத்தார் ? எப்பொழுது படைத்தார் என்ற சாதாரண விஞக்களுக்கும் அந்நூல்களில் விடை காணேம். ஞானமயமானவர், அன்பே வடிவானவர் எனக் கூறும் அக் கடவுள் துன்பமே நிறைந்த இவ்வுலகைப் படைக்கலாமா ? மக்களிடையே வஞ்சமும், சூதும், பொய்யும், பொருமையும், கொலையும், களவும்,

காமமும், தன்னலமுமே தலைவிரித்தாடும் என்பதை முன்னரே அறிந்திருக்க வேண்டாமா என்னும் வினைக் குரல் அக்குறட்பாவிலே தொனிக்கின்றது. மேலும் காணாத கடவுளைக் குறித்துப் பேசும் சமய நூல்களிலே அக்கடவுளை ஆதிபகவன், அறவாழி வேந்தன், எண் குணத்தான், மலர்மிசை ஏகினான், பொறிவாயிலைந் தவித்தான். வேண்டுதல் வேண்டாமையிலான் என்பன போன்ற மேலான குணப்பண்புகளாலோ, மன்னுயிர்க் காற்றிய நற்பணிகளாலோ புகழ்ந்து அழைக்கவும் கண்டிலோம். எக்காரணங் கொண்டு ஆதிபகவனைக் காணவியலாத முழு முதற்கடவுளென உரைக்கின் றாரோ நாம் அறியோம்.

நமது தமிழ் மறை தந்த பெருந்தகை அறம், பொருள், இன்பம் வீடு, என்னும் நான்கின் திறம் அறிந்து செப்பும் தேவர்; மெய்ப் பொருள் கண்ட மேதை; தேவமூடம், உலகமூடம், பாசண்டிமூடம் ஆகிய மும் மூடங்களை அகற்றிய அறவோர்; நற்காட்சி நன்ஞானம், நல்லொழுக்க மென்னும் மும்மணிகளை அணிந்த முனிபுங்கவர். இச் சான்றோர் மக்களைத் தவறான பாதையில் நடத்திச் சென்று மதச்சிறையில் அடைப்பவரவல்லர். கல்வித் துறையிலே, அறிவு வளர்ச்சியிலே, அறவாழ்க் கையிலே, ஒழுக்க நெறியிலே, உண்மைப் பாதையிலே அழைத்துச் செல்லும் ஆர்வமுடைய அறிவர். எனவே தமிழகத்தின் தலைசிறந்த முனிவர்களும் அறிஞர்களும், அரசர்களும் வழிவழிபோற்றிவந்த வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவரும், அகரமுதலாகிய எழுத்துக்களை யும் ஒன்று முதலாகிய எண்களையும் தோற்று வித்துக்

கல்வியறிவை வளர்த்தவரும், அருளறத்தின் வழியில் முதல் நூல் இயற்றிய வரும், பொருளாதார சமத்துவம் வளர பகுத்துண்டு வாழும் சமதர்மப்பண்பை வற் புறுத்தி வாழ்வுக்கு வழிகாட்டியவருமாகிய ஆதிபகவன் திருவறத்தை மேற்கொண்டார். இவ்வற நெறியே பழந் தமிழர் பண்பாடு. எனவே அப்பெருமகனை இறை யாக ஏற்றுத் திருக்குறள் என்னும் பொதுமறையை இயற்றி அருளினர். இவ்வரலாற்று உண்மையை உலகுக்கு அறிவுறுத்தவே,

" கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழா அரெனின் "

எனக் கற்றோரை அழைத்துக் 'கல்வியறிவை முதன் முதல் அளித்த பேராசிரியராகிய ஆதிபகவனைக் குரு வாக வழிபடுமாறு நினைவுறுத்துகின்றார். பாம்பறியும் பாம்பின்கால் என்பது பழமொழியல்லவா ? கல்வியின் பெருமையை, கல்வியின் மாண்பினை, கல்வியின் மேன்மையை கற்றோரே அறிவாராகையால் கற்றவர் கடமையை வற்புறுத்தியுள்ளார் நமது வள்ளுவக் கடவுள். இவ்வரலாற்றை அறிந்தே வெற்றி வேற்கை ஆசிரியர்,

" எழுத்தறி வித்தவன் இறைவ னாகும் "

எனக் கூறிப் போந்தார். பரிமேலழகர் கூற்றுப்படிக் காணாத கடவுளைத் திருக்குறளாசிரியர் தொழுதிருப்பின் கற்றவரை மட்டுமல்ல, மற்றவரையும் அழைத்துக் கடவுளை வழிபடுமாறு வற்புறுத்தி யிருப்பார். அது மட்டுமன்று. அறவுரைகள் பகராது பக்திமார்க்க முறைப்படிப் பலதோத்திரப்பாக்களைப் பாடியிருப்பார்.

அவ்வாறின்றி மக்கள் பலரும் ஒழுக்க நெறியிலே நிற்க வேண்டுமென்னும் இயல்பை,

"பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடு வாழ்வார்"

என்னும் குறளால் வற்புறுத்தலால், பொறி வாயிலைந் தவித்தானாகிய பகவான் விருஷப தேவரையே ஆதி பகவன் எனத் திருவள்ளுவப் பெருமான் வாழ்த்தி வணங்கியுள்ளாரென்பது உறுதிப்படுகின்றது.

**வைதிக சமய நூல்களில் பகவான் விருஷபதேவர்**

இறுதியாக நாம் அறியவேண்டிய உண்மை ஒன்றுண்டு. அவ்வுண்மை இலக்கிய உண்மை! வரலாற்று உண்மை! அறிவுக்குப் பொருந்தும் உண்மை! மறுக்க வியலாத உண்மை. பகவான் விருஷப தேவரைப் போற்றும் வேறு பல சமய நூல் களும் இருக்கின்றன. ரிக் வேதம் 10, 12, 166-ஆம் சூத்திரங்கள். யஜுர் வேதம் அத்தியாயம் 19 மந்திரம் 14. ஸ்காந்த புராணம், அதிகாரம் 4. விஷ்ணு புராணம் அதிகாரம் 1 பக்கம் 77. பாகவதம் 5-வது ஸ்கந்தம் ஆகியவற்றில் விரிவாகக் காணலாம்.

நமது பாரதநாட்டு ஜனாதிபதி டாக்டர் இராதா கிருஷ்ணன் அவர்கள் எழுதிய இந்திய தத்துவங்கள் என்னும் நூலில் (Indian philosophy) "பாகவத புராணம் பகவான் விருஷப தேவர் ஜைன தர்ம ஸ்தாபகர் என்பதை ஆமோதிக்கிறது. யஜுர்வேதம் பகவான் விருஷபநாதர், அஜிதநாதர், அரிஷ்டநேமி ஆகிய தீர்த்தங்கரர்களின் பெயர்களைக் கூறுகின்றது

வேதங்கள் எழுதப்படுவதற்கு முன்னரே ஜைன தர்மம் இருந்ததென்று நான் கூறுவதில் சிறிதும் அதிசயம் இல்லை " என எழுதியுள்ளார்.

இங்கே பாகவத புராணத்தில் விளங்கும் பகவான் இடபதேவர் வரலாற்றுக் குறிப்பை மட்டும் காண்போம்.

*மடவரன் மேருத்தேவி வனமுலைபொருது விண்ட
தொடையலங் கோதைதாழ்ந்து துயல்வரப் பணைத்து வீங்கும்
அடல்கெழுதிணிதோள் நாபிக் காழியந் தடக்கையானே
இடப னென்றுலகமெல்லாம் ஏந்துறத்தோற்றம் செய்தான்

" மன்னிய துறவறங்கள் வழங்கியும் வங்கமாதி
உன்னிய தேயத்தூமருணர்விலாப் பெயரே போலத்
துன்னியு முலகுளோர்க்குத் தொலைவில்பேர் வீடுசேரும்
நன்னெறி தெரித்துமுத்தி நண்ணினன் இடபன் மாதோ "

இவ்விரு பாக்களாலும் பகவான் இடபதேவரின் தோற்றத்தையும் அவரே முதன் முதல் உலகுக்கு நன்னெறி பயந்தவர் என்ற உண்மையையும் கலங்கரை விளக்கம் போல் காண வைத்துள்ளார் பாகவத புராணக்காரர்.

" ஜைன சித்தாந்தம் மிகப் பழமையான காலத்திலிருந்தே பரவியிருக்கிறது. " அருகன் இதம் தயஸேவிஸ்வமயம் " என்றும், ரிஷபம் மாஸமானனும் சபத்னனும் விஷாசகிஹந்தானும் சத்ருனும் ததி விராஜ கோபிதம் கவாம் " என்றும் ரிக், யஜுர் வேதங்களில் காணப்படும் மந்திரங்களால் அதன் தொன்மை தெளிவாகிறது" என பேராசிரியர் விருபாக்ஷ எம். ஏ. வேததீர்த்த

*இஃது வடமொழி பாகவதத்திலின்றும் புலவர்திலகம் ஆரியப் புலவர் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டு 1907-ல் வெளியிடப் பெற்றத் தமிழ் பாகவத புராணத்தில் உள்ளது.

அவர்களும் தமது அறிவுசான்ற ஆராய்ச்சி நூலில் விளக்கியுள்ளார்.

. ஸ்ரீலோகமான்ய பாலகங்காதர திலகர் அவர்கள் "யான் அறிந்தவரை சாஸ்திரங்களிலிருந்தும் வியாக்கியானங்களிலிருந்தும், ஜைன தர்மம் அனாதி காலத்தது எனத் தெரிய வருகின்றது. இவ்விஷயம் விவாதமற்றதாய் மதபேத மில்லாததாய் இருக்கின்றது. வரலாற்றுப் பிரமாணங்களும் கிடைக்கின்றன" எனக் கூறியுள்ளார். மொஹஞ்சதாரோ, ஹரப்பாவில் நிர்வாணமாக யோகத்தில் நிற்கும் சிலைகளும், ஸ்வஸ்திக் மார்க்குகளும், ஜிஞய நம: எனப் பொறிக்கப் பெற்ற முத்திரைகளும் ஜைன தர்மத்தின் பழமையைக் காட்டுகின்றன எனப் பேராசிரியர்கள் எழுதியுள்ளார்கள். இச் சான்றுகளாலும் இப்பேரறிஞர்களின் கருத்துரைகளாலும் பண்டைக் காலவேதசாஸ்திரங்களிலேயே பகவான் விருஷபதேவர் போற்றப்பெற்றுள்ளார் என்பதை அறிந்தோம். பரத கண்டத்தில் பகவான் விருஷபதேவர் போற்றப் பெற்றது போலவே பண்டைக் காலத்தில் மேல் நாடுகளிலும் போற்றப் பெற்றார் என்ற வரலாற்றையும் ஆராய்ந்து மேலே செல்வோம்.

பேராசிரியர் டாக்டர் ஹாஜிமே நாகமுரா எழுதியுள்ள ஒரு பெரிய கட்டுரையில் பின்வரும் செய்திகள் காணப்படுகின்றன.

1. சீன மொழியிலுள்ள பௌத்த நூலாகிய திரிபீடகத்தில் ஜைனர்களின் முதல் தீர்த்தங்கரராகிய பகவான் விருஷப தேவரைப் பற்றிப் பல குறிப்புகள் காணப்படுகின்றன.

2. சீன மொழியிலுள்ள ஷட் சாஸ்திரம் முதல் அத்தியாயத்தில் விருஷப தேவரை 'பகவத்' என அழைக்கப்பட்டுள்ளதென்றும், விருஷப தேவரின் சீடர்கள் ஜைன அறநெறிகளைப் பயின்று வந்தனர் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

3. சீன மொழியிலுள்ள பிடக்கிரந்தம் என்னும் ஜைன நூலில் மகாசத்திய நிர்க்கிரந்த புத்த வியாக்யானம் என்னும் நூலும் அடங்கியிருக்கிறது. ஷை நூல் கி பி. 519-ல் போதிருசி என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டு அதை திரிபீடத்தில் சேர்த்து விட்டார். இவ்வாறு அவர் செய்ததன் நோக்கம் சைனாவிலுள்ள ஜைனர்களைப் பௌத்த மதத்தைத் தழுவும்படி செய்வதற்காகவே யாகும்.

4. சீனநாடு போலவே ஜப்பானியர்களும் பகவான் விருஷபதேவரை ரோக்ஷேவ் (Roke Shave) எனப்போற்றி வழிபட்டு வந்துள்ளனர்.

5. இலங்கையிலுள்ள மகாவம்சம் என்ற நூலில் அனுராதபுரம் ஒரு ஜைனஸ்தலமாக இருந்தது. இங்குள்ள ஆதிதீர்த்தங்கரராகிய பகவான் விருஷப தேவர் கோயில் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுவரை சிறப்புற்று விளங்கிற்று. அதுவரை அப்பகுதியை ஆண்ட அரச குடும்பத்தினரால் பாதுகாக்கப்பட்டு வந்தது என அரிய வரலாற்றுச் செய்திகளை அளித்துள்ளார்.

மற்றொரு பேராசிரியர் R. G. ஹர்ஷே என்பவர் டெக்கான் கல்லூரி ஆராய்ச்சி அறிக்கையின் பக்கம் 229-230-ல் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

1. தற்போது அலாஷ்யா என அழைக்கப்படும் இடத்தில் கி. மு. 12-ம் நூற்றாண்டிலிருந்த ரீஷப் என்னும் சிலையை ஆராய்ந்தபோது அது விருஷப தேவர் சிலையாகவே விளங்கின. ரீஷப் எனில் விருஷப தேவரேயாகும்.

2. இக்கருத்தை வலியுறுத்த அந்நாட்டு மக்கள் பணிக்கர்களின் மொழியில் ரீஷப் என்னும் சொல்லுக்குக் கொம்புடைய பிராணி தேவர் எனப் பொருள் கூறப்படுகிறது. அந்த ரீஷப் சிலையின் கொம்புகள் எருதுகளின் கொம்புகள் போலவே இருந்தன.

3. இதனால் அந்நாட்டு மக்களாகிய பணிக்கர்கள் பகவான் விருஷபதேவரையும் அவர்தம் அறச் சின்னமாகிய எருதையும் வழிபட்டு வந்தனர் என்பது தெளிவாகிறது.

4. பணிக்கர் வகுப்பாரிடையே ஒரு பழமையான கவிதை பாடப்பட்டுவந்துள்ளது. அது **ரஸஸ்மாரா** என்னும் இடத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டது. அதில் பகவான் விருஷபதேவர் கர்மங்களை வென்று பரிபூரண ஞானியானார் என்றும் பின்பு ஒவ்வொரு நகரம், கிராமமாகச் சென்று தர்மோபதேசம் செய்து வந்தார் என்றும் கூறப்பட்டுள்ளது.

தற்கால வெளிநாட்டுப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களின் அறிக்கைகளில் கீழ்வரும் செய்திகள் காணப்படுகின்றன.

சோவியத் அல்மேனியாவின் கரீமர்ப்பூலா (சிகப்பு மலை) " தேஷேன்வி " என்று கூறும் உரதியம்

நகரம் இருக்கிறது. பேபிலோனியாவின் " இஸ்பேசூர் என்னும் நகரம் ரிஷப்பூர் என்றதன் திரிபுவேயாகும். அங்கே தேஷப் தேவரின் (ரிஷப்) சிலேயும் இருந்திருக் கிறது. பழைய காலத்தில் " தேஷவ் " அல்லது தேஷப் ரூபத்தில் பகவான் விருஷப தேவர் மகிமை மத்திய ஆசியாவிலிருந்து சோவியத் நாடுவரை பரவி யிருந்தது.

மவாதியா, ஜின்னேரவி, இஸ்பெக்ஜுர் முதலிய இடங்களில் தேஷப் தேவரின் (ரிஷப் தேவர்) சிலேகள் காணப்படுகின்றன. அச்சிலேகள் நிர்வாண நிலேயில் எருதைச் சின்னமாகக் கொண்டு விளங்குகின்றன. அவருக்கு ஆயுதம் திரிசூலம் போன்று காணப்படு கிறது. (இது இரத்தினத் திரயத்தைக் குறிக்கும்)*

இவ்வாறு இவ்வுலக வரலாற்றில் மிகப் பழங்கால முதலே பகவான் விருஷப தேவர் இடம் பெற்றிருந்தார் என்ற உண்மையையும் அறிந்தோம.

அப்பெருமானே தலேவர் தம் தலேவர்க்கும் தலேவ ராய், அறிவர் தம் அறிவர்க்கும் அறிவராய், முனேவர் தம் முனேவர்க்கும் முனேவராய், புலவர்தம் புலவர்க்கும் புலவராய், இறைவர்தம் இறைவர்க்கும் இறைவராய் விளங்குகின்ருரென்னும் வரலாற்றையும் கண்டோம். இவ்வரலாற்று முதல் அறிவனேயே கடவுள் என உலக மெலாம் போற்றியது. இப்பெருமான் அருளிய அருள றத்தை மக்களனேவரும் மேற்கொண்டு வாழ்ந்தனர். பின்னரே பல பிரிவுகள் ஏற்பட்டன. அவை யாவும் சமயம், மதம் என்ற பெயரால் வகுக்கப்பட்டன. இவை

---

*இவைகள் Voice of Ahimsa என்ற இதழில் வந்தவை.

களில் சைவமும் வைணவமும் பகவான் விருஷப தேவ ரையே வெவ்வேறு உருவங்களாலும் வெவ்வேறு பெயர் களாலும் வெவ்வேறு கதைகளாலும் கற்பனை செய்து கொண்டன.

**சமயங்களின் தோற்றம்**

இவ்வுண்மையை ஆராய நமக்குப் பொறுமை வேண்டும். நாம் மேற்கொண்டுள்ள சமயக் கொள்கை களை மறந்திருக்கவேண்டும். நேர்மை வேண்டும். நுண்ணிதின் ஆராய்தல் வேண்டும். அப்பொழுது தான் உண்மை புலனாகும்.

பகவான் விருஷப தேவரை விஷ்ணு புராணம் போற்றுகின்றது. பாகவத புராணம் மகாவிஷ்ணுவின் பல அவதாரங்களில் ஒன்று என அவரை ஒப்புக் கொள்ளுகின்றது. உலகுக்கு அஹிம்ஸா தருமத்தைப் போதிக்கவே மகாவிஷ்ணு, பகவான் விருஷபதேவராக அவதரித்தாரெனவும் பொறித்திருக்கின்றது. இக்கருத் தைத் திறந்த உள்ளத்தில் பதிய வைக்கவேண்டும். இவ்வாறே ஸ்காந்த புராணமும் சிவபுராணமும் பகவான் விருஷப தேவரைப் போற்றுகின்றன. மேலும் பகவான் விருஷப தேவர் நிலையையும் சிவ பெருமான் நிலையையும் ஒப்பிட்டுக் காண்பார்க்கு இவ் வொற்றுமை ஒருவாறு புலனாகும்.

பகவான் விருஷப தேவர் தவமியற்றி வீடுபேறு பெற்ற இடம் கைலாயமலை. சிவபெருமான் இருக் கையும் கைலாயம். பகவான் விருஷபதேவருக்குச் சின்னம் விருஷபம். சிவபெருமானுக்கு வாகனம் விருஷபம். பகவான் விருஷபதேவர் ஆலமரத்தின்

கீழிருந்து அறமுரைத்தார். சிவபெருமான் தக்ஷிணா மூர்த்தமும் ஆலமரத்து அடி. பகவான் விருஷப தேவர் பல மாதங்கள் தொடர்ந்து தவத்தில் நின்றார். அதனால் சடை வளர்ந்தது. சிவபெருமான் சடையை வளர்க்கின்றார். பகவான் விருஷபதேவர் வினைகளாகிய அவுணரைத் துரத்த நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் ஆகிய மும்மணிகளாகிய ஆயுதங்களைத் தாங்கினார். சிவபெருமான் தம்மை எதிர்த்த அவுணரை அழிக்க மும்முனைகளைக் கொண்ட சூலாயுதத்தை ஏந்தினார். பகவான் விருஷபதேவர் ஐம்புல அடக்கத்தால் காமனை வென்றார். சிவபெருமான் கோபங்கொண்டு காமனை எரித்தார். பகவான் விருஷபதேவர் கடையிலா ஞானம் (வாலறிவு) பெற்றமையால் அவ்வறிவனை மூன்று கண் முனித்தலைவன் எனப் போற்றினர். சிவபெருமான் மூன்று கண்களை உடையவர். பகவான் விருஷபதேவர் அடைந்த கேவலஞான நிலையைக் கண்டு கேவலக் கிழத்தியைப் பிரியாத ஒரு பாகன் எனப் புலவர்கள் போற்றினர். இங்கே சிவபெருமான் பார்வதியைத் தமது உடலிற் பாதியாகக் கொண்டுள்ளார். பகவான் விருஷபதேவர் பண்டைய இலக்கியங்களில் சிவன், சிவகதிநாயகன், சிவகதிக்கிறைவன் எனப் போற்றப் பெற்றுள்ளார். சிவம் எனில் மங்கலம் அல்லது தூய்மை எனப் பொருள்படும். இப்பெயர் ருத்தர மூர்த்தியாகிய சிவபெருமானுக்கு ஏற்றப் பட்டுள்ளது. பகவான் விருஷபதேவர் வீடுபேறு பெற்ற திருநாள் சிவராத்திரி என வழங்கப்படுகிறது. இங்குச் சைவசமயத்திலே மயானக் கொள்ளையாகக் கொண்டாடப்படுகிறது. பகவான் விருஷபதேவர் அருளிய அறத்தின் வழி நின்ற முனிவர்களில் பலர்

கனக நந்தி. விஜயநந்தி, பவணந்தி, தருமநந்தி என்றெல்லாம் அழைக்கப்பட்டுள்ளனர். சைவசமயத்திலே விருஷப வாகனத்தை நந்தி என அழைக்கின்றனர். பகவான் விருஷபதேவரைக் கைலாசநாதரெனவும், அப்பெருமான் அமைந்துள்ள கோயில்களைக் கைலாசநாதர் கோயில் எனவும் வழங்குகின்ற இலக்கியங்களும், கல்வெட்டுச் செய்திகளும், எங்கும் காணப்படுகின்றன. சிவபெருமானுக்கும் அவ்வாறே வழங்கப்படுகின்றது. எனவே நாம் முன்னர் கூறியது போன்று பிற்கால மாறுதல்களால் பகவான் விருஷப தேவர் தவநிலை கொண்ட சிலைகள் இல்லற நிலையாகக் காட்சியளிக்கின்றன. அறத்தின் சின்னம் படைக்கலன்களாயின. அறவாழி கொலையாழியாகச் சுழல்கிறது. அருளுருவம் அக்கினிச் சட்டியாலும் மண்டையோடுகளாலும் பயங்கரத் தோற்றமாயின. அறம் அறம் எனப் பேசிய பொதுநெறி, சமயம் சமயம் எனும் குறுகிய நிலையை எய்தியது. இப் பிளவுகள் வடக்கே உதித்து தெற்கே வந்து சேர்ந்தன. இச் சைவ சமயக் கொள்கைள் காபாலிகம், காளாமுகம், பாசுபதம் போன்ற உட்சமயங்களுடன் தமிழகத்தின் பிற்காலத் தமிழ் நூல்களில் இடம் பெற்றன. இப்பிரிவுகளை அறிய,

> " சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல்
> அமைந்தொருபால்
> கோடாமை சான்றோர்க் கணி "

என்னும் தேவர் திருமொழியின் வழிநின்றாலன்றி உண்மை காண வியலாது. மதமோ சமயமோ நம்மோடு உடன் பிறந்தவை அல்ல என்னும் இயற்கையை உணர்ந்து இவ்வாராய்ச்சியில் நுழையும் அறிஞர்

களுக்கு விழிப்பும் வியப்பும் உண்டாகும். பகவான் விருஷபதேவரின் அருளறமும், கல்வி முறையும், சமுதாய சகோதர அமைப்புமே நமது பழந்தமிழரின் பண்பாடாக விளங்கின என்னும் உண்மையைக் காண்பார்கள். இவ்வரலாற்றைத் துருவித்துருவி ஆராய்ந்தவர் நமது தமிழகத் தனிப் பெருந் தலைவர் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களாவார்கள். அப்பெரியார் தமது வாழ்க்கையில் மூன்று பிறவிகள் எடுத்துள்ளார்கள். அவர்தம் ஆரம்பகாலம் சமயக் கொள்கையில் ஆர்வமும் அறிவும் பெற்று விளங்கியது. இடையில் அரசியலில் ஈடுபட்டார். இவ்விரண்டாம் பிறவியில் மக்கள், நாடு, சமரசம் என்னும் பொது நோக்கின் வழி சென்றது. அவர் வாழ்க்கையின் மூன்றும் பிறவி மாண்புடையது. எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருளில் மெய்ப் பொருள் காணும் துணிவு பெற்றார். அத்துறையில் மேதையும் ஆனார். சமரச சன்மார்க்கத்திலும் எல்லாச் சமய ஆராய்ச்சியிலும் ஆர்வங்கொண்டு ஆராய்ந்தார். தொழிலாளர் வாழ்க்கையின் வீழ்ச்சியைக் கண்டு கண்ணீர் வடித்தார். இவைகள் யாவும் இறைவன் செயலா என எண்ணி எண்ணி ஏங்கினார். அரசியல் கோளாறும் சமுதாய சுயநலமுமே இதன் காரணம் என அறிந்தார். திருக்குறளிலே ஆழ்ந்தார். திருக்குறள் ஆசிரியர் வாழ்த்தும் ஆதிபகவனை அடைக்கலம் புகுந்தார். தமது சமரசக் கொள்கைக்கு அரண் செய்வது ஆதிபகவன் அருளிய திருவறமே எனத் தெளிந்தார். அடங்கா மகிழ்ச்சிக் கொண்டார். பகவான் **விருஷதேவர், காரஸ்மார்க்ஸ், லெனின், மகாத்மா காந்தியடிகள், வினோபாபாவே** ஆகிய மாபெருந் தலைவர்கள் தமது

அகக்கண் எதிரே காட்சியளித்தனர். வணக்கம் செலுத்தினர். பகவான் விருஷபதேவர் அருளிய நல்லறத்திலே பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் பேரறம் தமது திரு. வி. க. அவர்களின் உயிர் கலந்து உளங் கலந்து ஊன் கலந்து சென்றது. உள்ளம் பூரித்தார். மதக் கொள்கைகளை மனத்தகத்தே துறந்தார். பண்டைய காலம் போலவே நமது தமிழகத்தில் அன்பொளி வீசிப் பண்பு வளர வேண்டுமென விழைந் தார். அன்பும் சகோதர உணர்ச்சியும் மக்கள் வாழ்க் கையில் மலர்வதைத் தடை செய்யும் மதக் கோட்பாடு களைக் காய்ந்தார். தாம் கண்ட உண்மைகளை உலகுக்கு உணர்த்தத் துணிந்தார். " அருகன் அருகே அல்லது விடுதலை வழி " எனவும் " பொருளும் அருளும் அல்லது மார்க்ஸியமும் காந்தியமும் " எனவும் இரு பெரும் நூல்களை இயற்றி அருளினர். அப்பெரியாரின் மூன்றும் பிறவியில் மலர்ந்த அறிவு மலர்கள் அவை. மக்கள் வாழ்க்கை நலத்தை ஓம்புதற்குரிய அறிவும் அறமும் நிறைந்தவை அத்தூய கலைமலர்கள். அம்மலர் களிலே வீசும் மணம் பலதிறப்பட்டவை. வரலாற் றுண்மைகள், அறவுரைகள், பொதுவுடைமைக் கொள் கைகள், ஒழுக்க நெறிகள் ஆகிய நன்மணங்கள் வீசு கின்றன. அம் மணங்களில் சிலவற்றைத் துய்த்து எம்மானைப் போற்றி இன்புறுவோம்.

" ஆதி பகவன்சோதி நாதன்
விருஷபதேவன் புருஷ நாயகன்
அவனே இறைவன் அவனே ஈசன்
அவனே மாயன் அவனே நான்முகன்
அவனே சித்தன் அவனே அருட்சினன்
அவனே தர்மம் அவனே அகிம்சை

அவனே அருகன் அருகே அணைந்தால்
விடுதலை வழியைக் கடிதில் பெறலாம்
அவனை எண்ணுவம் அவனை வாழ்த்துவம்
அவன்பணி ஆற்றுவம் அவன்நெறி ஓம்புவம் ;

ஜைனம் எது ?

அந்நெறிஎதுவோ ? செந்தண் ஜைனம்
ஜைனம் ஒருமதச் சார்பினதன்று
ஜைனம் எதுவெனச் சாற்றுவன் இங்கே :
ஐம்புலன் வெல்லும் செம்மை ஜைனம்
ஒழுக்கம் காக்கும் விழுப்பம் ஜைனம்
கொலைகளை வொழிக்கும் நிலைபெறல் ஜைனம்
கள்பொய் காமம் தள்ளல் ஜைனம்
ஊனுண்ணாத மேனிலை ஜைனம்
வெறிஆவேசம் முறியிடம் ஜைனம்
சாந்த அமுதம் மாந்தல் ஜைனம்
நல்லெணம் நன்மொழி நற்பணி ஜைனம்
பிறர்க்கென வாழும் திறத்துறை ஜைனம்
தேவை அளவை மேவல் ஜைனம்
அகிம்சா தர்மம அனைத்தும் ஜைனம்;
இந்த ஜைனம் எந்த மதமோ ?
மக்கட் குரிய தக்க பொதுமை

அறவோர்

அகிம்சை அருளா அறவோர் இல்லை
புத்தர் சோக்ரதர் உத்தமக் கிருஸ்து
வள்ளுவர் வசுவர் தெள்ளியல்மூலர்
தாயுமானவர் நேயச் சாந்த
லிங்கர் இராமலிங்க அடிகள்
தால்ஸ்தாய் காந்தி சால்பின ரெல்லாம்
அகிம்சா தர்மம் அருளியே சென்றனர்
அன்னவர் போதனை பின்னை நாளில்

விதவிதமான மதமத மாயது!
என்னே பிளவு! என்னே உலகம்!
அகிம்சா ஜைனம் அகன்ற ஜைனம்
அகண்ட ஜைனம் அகிலமாக
வேண்டுவம் என்றும் வேண்டுவம் நாமே;

அருகன் அருகே—234—271 வரிகள்.

## பொருளும் சீலமும்

வாழ்வு வளரச் சூழ் பொருள் தேவை
பொருளை வெறுத்தல் மருளின் மயக்காம்
பொருட்கலைப் பயிற்சி பொதுள எங்கும்:
முதல்—தொழில் வேற்றுமை உதயமாகக்
காலம் பொருளால் சீலம் நிலைத்தது;
முதல்—தொழில் வேற்றுமை மோதுமிக் காலம்
பொருளால் சீலம் சுருளுகின்றது;
ஒருபால் பெருகி மறுபால் அருகும்
பொருள் தரும் அல்லலில் பொரியும் சீலமும்;
சீலம் வாழ்வின் சீவநாடி
நாடி விழுந்தால் வாடும் வாழ்வே;
உடைமையும் அல்லல் இன்மையும் அல்லல்
இரண்டும்சீலம் சுரண்டும் யமனும;
உடைமையும் வேண்டா இன்மையும் வேண்டா
வேறு வழியென்? தேறுதல் வேண்டும்;

## மார்க்கிஸ்—காந்தி—அருகன்

மார்க்கிஸ் முனிவன் மார்க்கம் கண்டனன்
அந்த மார்க்கம் யரக்கை போன்றது;
ஆவி நல்க மேவினன் காந்தி;
மார்க்கிஸ் காந்தி மார்க்க மூலம்
யா தென்றுலகம் ஓதுகின்றது?
ஆதி அருகன் ஓதினன் மூலம்;

அகிம்சை மேலாம் அறமென முதல் முதல்
அருளிய பெருமை அருகனுக் குண்டே :
அகிம்சை உயிர்ப்பை அளித்த ஐயன்
சீலப் போர்வையும் சால அமைத்தனன்
சீலம் வளர்வழி கோலினள் ; அதுவே
மிகு பொருள் விரும்பா மேன்மை ஒழுக்கம் ;

பொருளும் அருளும்—

பொருள்—(50—76) வரிகள்

---

## ஆதிபகவன் வாழ்த்து



1. கன்று காலனைக் கடந்தாய்
 காதற் காமனைக் கடிந்தாய்
தொன்று மூத்தனைத் துறந்தாய்
 தோற்ற மாக்கட லிறந்தாய்
ஒன்ற நோய்பகை ஒருங்கே
 யுடைந்து வெங்களத் துதிர
வென்றி ருந்தனை நீயே
 வீரர்தம் வீரர்க்கும் வீரா.

2. சாதல் நோய்சரை பிறவி
 தாம்செய் தீவினைக் கடலுள்
மாது யருழந்து றுநோய்
 மறுகும் மன்னுயிர்க் கெல்லாம்
தீதுஇல் நன்னெறி பயந்து
 திரைசெய் நீள்கரை ஒருவிப்
போதரும் புணை படைத்தாய்
 புலவர்தம் புலவர்க்கும் புலவா.

3. அரிய. வாயின செய்திட்டு
அமரர் துந்துபி அறைந்து
புரிய பூமழை பொழியப்
பொன்னெயில் மண்டிலம் புதைந்த
விரிகொள் தண்தளிர்ப் பிண்டி
மரநிழல் இருந்(து) இருவினையும்
பிரியும் பெற்றியை உரைத்தாய்
பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய்.

4. பொங்கு சாமரை ஏந்திப்
புடைபுடை இயக்கர்நின் றிரட்டச்
சிங்க ஆசனத் திருந்து
தெளிந்தொளி மண்டிலம் நிழற்ற
திங்கள் முக்குடை கவிப்பத்
தேவர்தம் திருந்தவை தெருள
அங்க பூவமதறைந்தாய்
அறிவர்தம் அறிவர்க்கும் அறிவா.

5. ஊறி யாவதும் உணரா
உறல்வகை இதுவென உரைத்தி
கூறுவேன் எனக் கூறாய்
குரல்முரசனையதோர் குணத்தைச்
சேறல் உள்ளமும் இலையாய்த்
திருமலர் மிசைஅடி இடுதி
தேறு மாறென்னை நின்னைத்
தேவர்தம் தேவர்க்கும் தேவா.

6. கண்ணினால் ஒன்றுங் காணாய்
காணவும் உளபொருள் ஒருங்கே
பெண்ணும் அல்லவும் சாராய்
பிரிதலில் பேரின்பம் உடையை
உண்ணல் யாவதும் இலையாய்
ஒளிதிகழ் உருவமஃது உனதால்
எண்ணில் யார்நினை உணர்வார்
இறைவர்தம் இறைவர்க்கும் இறைவா.

7. சொற்றி யாவதுங் கேளாய்
 சுதநயம் துணிவுமங் குரைத்தி
கற்றி யாவதும் இலையாய்க்
 கடையில்பல் பொருளுணர் உடைமை
பற்றி யாவதும் இலையாய்ப்
 பரந்தவெண் செல்வமும் உடைமை
முற்ற யார்நினை உணர்வார்
 முனைவர்தம் முனைவர்க்கும் முனைவா.

8. அன்மை யாரவர் தாம்தாம்
 அறிந்தன உரைத்தபொய் யாக்கி
நின்மெயாகிய ஞான
 நிகழ்ச்சி நீவிரித்(து) உரைத்த
சொன்மை யாரிடை தெரிந்தார்
 தொடர்வினை முழுவதும் சுடும்நின்
தன்மை யார்பிறர் அறிவார்
 தலைவர்தம் தலைவர்க்கும் தலைவா.

—நீலகேசி.

*திருவறம் வளர்க!*





# நாயனார் கோயில்

## (ஜீவபந்து ஸ்ரீபால்)

சென்னை மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் கோயிலைப் பலரும் நன்கு அறிவர். அக்கோயிலைத் திருவள்ளுவர் கோயில் என இன்று அழைக்கப் பட்டாலும் [3] சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் நயினர் கோயில் என்றே வழங்கி வந்தது.

வரலாற்றின் வழியில் ஆராயும்போது அக்கோயில் தோன்றிய காலத்திலிருந்து சில நூற்றாண்டுகளுக்கு முன்னர்வரை **நாயனார் கோவில்** எனவழங்கி வந்துள்ளது. நாயனார் எனில் நாயகன், தலைவன் எனப் பொருள்படும். நாயனார் என்ற இச்சொல் முதன் முதல் ஜைன சமயத்தவர் போற்றும் தீர்த்தங்கரர்களுக்கும் ஜைன முனிவர்களுக்கும் பட்டப் பெயராகத் தொனறு

தொட்டு வழங்கி வந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் மதுரைக்காண்டத்தின் ஆரம்பத்தில்

" திங்கள் மூன்றடுக்கிய திருமுக்குடைக் கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதை தாழ்பிண்டிக் கொழுநிழ லிருந்த
ஆதியில் தோற்றத்து அறிவனை வணங்கி"

என்னும் அருகன் வாழ்த்துக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் அறிவன் கோயில் என்பதற்கு **நாயனார் கோவில்** என உரை எழுதியுள்ளார். இது போன்றே கழுகுமலையிலுள்ள கல்வெட்டுச் செய்திகளில் ஜைன முனிவர்களைப் பற்றிய குறிப்புகளில் **நாயனார்** எனப் பொறிக்கப்பட்டுள்ளன. திருவதிகையில் கிடைத்த கல்வெட்டுக்களில் ஜைனக்கோயிலை நால்முக நாயனார் கோயில் என்றும், முனைதீச்சுரம் உடைய நாயினார் என்றும் காணப்படுகிறது. திருப்பரிதிக் குன்றத்துக் கோயில் கல்வெட்டுச் செய்தியில் அக் கோயில் தீர்த்தங்கரரை நாயனார் என்றே பொறிக்கப் பெற்றுள்ளது. நன்னூலுக்கு உரை எழுதிய மயிலை நாதர் தமது உரையில் அவிநாயனார் என்னும் ஜைன அறவோரை அறிமுகப்படுத்தி உள்ளதைப் புலவர் உலகம் நன்கு அறியும். சில பண்டைய கல்வெட்டுச் செய்திகளில் தீர்த்தங்கரர்களையும், முனிவர்களையும் நயினார் என்றும் குறிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக விழுப்புரம் தாலுக்காவிலுள்ள கோலியனூர் ஜைனக் கோயில் ஒன்றில் ஸ்வஸ்தி ஸ்ரீநயினார் தேவர் பெருமானார் ஸ்ரீகோவில் என்றும், கோலியாபுர நல்லூர் நயினார் அருமொழி நாயகர் கோயில் என்றும் காணப்படுகின்றன. இவ்வரலாற்றின் அடிப்படையிலேயே திருக்

குறளாசிரியருக்கும் நாயனூர் என்றும், தேவர் என்றும் பட்டங்கள் அமைந்துள்ளன. தேவர் என்ற பட்டத்தைப் பற்றிய வரலாறு பலருக்கும் நன்கு தெரியும். ஜைன சமயத்தைத் தோற்றுவித்த முதல் தீர்த்தங்கரருக்கு விருஷப தேவர் (இடப தேவர்) எனப் பட்டம் வழங்கி வந்துள்ளது போன்று ஜைன முனிவர்கள் பலருக்கும் தேவர் பட்டம் விரவி வந்துள்ளதைக் காணலாம். எனவே நாயனுர், தேவர் என்ற பட்டங்கள் முதன் முதல் ஜைன தீர்த்தங்கரர்களுக்கும் முனிவர்களுக்கும் வழங்கி வந்துள்ளன என்பதை அறிகின்றோம்.

இவ்வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு மயிலாப்பூரில் அமைந்துள்ள திருக்குறளாசிரியரின் திருக்கோயில் வரலாற்றை ஆராய்வோம்.

" மறமேமுனிந்து மயிலாபுரி நின்று மன்னுயிர்கட்
கறமே பொழியும் அருட்கொண்டலே யதரஞ்சிவந்த
நிறமே கரியவொண் மாணிக்கமே நெடுநாளொழித்துப்
புறமே திரிந்த பிழையடியேனைப் பொறுத்தருளே "

எனத் திருநூற்றந்தாதி ஆசிரியர் மயிலாபுரியில் கோயில் கொண்டிருந்த நேமிநாத தீர்த்தங்கரரைப் போற்றியுள்ளார். இதுபோன்று வேறு பல தோத்திரப் பாக்களாலும், மயிலாப்பூரில் கிடைத்துள்ள ஜைன தீர்த்தங்கரர்களின் உருவச்சிலைகளாலும், கல்வெட்டுச் செய்திகளாலும், பண்டைய காலத்தில் ஜைன சமயத்தின் உறைவிடமாய் மயிலாப்பூர் விளங்கிற்றென்பது தெளிவாகிறது. இத்தகு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த மயிலாப்பூரில் நன்னூல் உரை ஆசிரியர் மயிலைநாதர், அவிரோதிநாதர், நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதர் போன்ற பல்கலைச் செல்வர்களாகிய ஜைன

அறவோர்கள் வாழ்ந்து வந்தனர் என்பதையும் ஆராய்ச்சி அறிஞர்கள் அறிவர். மயிலாப்பூரில் வாழ்ந்த ஜைனப் பெருமக்கள் நேமிநாதரை வழிபட்டதைப் போன்றே தெய்வப் புலவராம் திருக்குறளாசிரியரையும் வழிபட மயிலையில் கோயில் ஒன்று அமைத்தார்கள். அக்கோயிலில் திருக்குறளாசிரியரின் திருவடிச் சின்னங்களைப் பொறித்து வைத்து வழிபாடியற்றி வந்தனர்.

நமது பாரத நாட்டின் வரலாற்றை ஆராயின் ஜைன சமயத்தவரே முதன் முதல் தங்கள் தீர்த்தங்கரர்களையும், ஆச்சாரியர்களையும், முனிவர்களையும் வழிபட அம்மகான்களின் திருவடிச் சின்னங்களை அமைத்து வழிபட்டு வந்துள்ளது நன்கு விளங்கும். குறிப்பாக இமயமலையில் கைலாசகிரியிலும், வங்காளத்தைச் சார்ந்த சம்மேதசிகரமலையிலும், சம்பாபுரி, பாவாபுரி, கிர்னார் போன்ற பல மலைகளிலும் தீர்த்தங்கரர்களின் திருவடிகள் பொறிக்கப் பெற்றுள்ளன.* தமிழகத்தில் பொன்னூர் மலையில் திருக்குறளாசிரியர் குந்தகுந்தாச்சாரியார் திருவடிகளையும், இப்பெருமான் பிறந்த திருத்தலமாகிய *குந்தகுந்தா மலையிலுள்ள திருவடிகளையும், திருப்பறம்பூர் அகளங்கதேவர் திருவடிகளையும், ஜின காஞ்சியில் வாமனமுனிவர் திருவடிகளையும், விழுக்கம் குணசாகரர் திருவடிகளையும் காணலாம்.

கி. மு. 3-ம் நூற்றாண்டில் தென்னகம் விஜயம் செய்த பத்திரபாகு சுவாமிகளின் திருவடிகளும், மௌ

---

*குண்டக்கல் பக்கத்தில் உள்ள குந்தகுந்தாபுரத்தில் குந்தகுந்தர் பற்றிய கல்வெட்டுச் செய்திகளுடன் இன்றும் காணலாம்.

ரிய சக்கரவர்த்தி சந்திரகுப்த மன்னரின் திருவடிகளும் சிரவண பெள்குளாவில் அழகாகப் பொறிக்கப் பெற்றுள்ளன. இவ்வழக்காற்றின் துறையிலேயே மயிலையிலும் திருக்குறள் ஆசிரியரின் சிறப்புப் பெயர்களாகிய திருவுள்ள நாயனர், அல்லது திருவுள்ள தேவர் எனப் போற்றி அவர் திருவடிகளை ஜைனப் பெருமக்கள் வணங்கி வந்தனர். இவ்வழிபாட்டில் ஏனைய சமயத்தவரும் கலந்துகொள்வார்கள். அவர்கள் இக்கோயிலைக் குறிப்பிடும்போதெல்லாம் தமிழகத்து ஜைனப் பெருமக்களின் பட்டப்பெயராகிய நயினர் என்பதைக் கொண்டு நயினர் கோயில் என அன்புடன் அழைத்துப் போற்றுவார்கள். அவ்வழக்கம் இன்றும் அப்பகுதியில் வழங்குவதைக் காணலாம். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்னர் 'திருவள்ளுவர் கோயில் எது?' என்று கேட்டால் அக்கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் வசிக்கும் மக்கள் ஒன்றும் விளங்காமல் விழிப்பார்கள். நயினர் கோயில் எனில் 'அதோ' எனச் சுட்டிக்காட்டுவார்கள்

கி. பி. 17-ம் நூற்ருண்டுவரை மயிலாப்பூரில் பெரும்பாலும் ஜைன சமயத்தவரே வாழ்ந்து வந்தமையால் அவர்களின் பட்டப் பெயராகிய நயினர் என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டு அவ்வாறு அழைத்து வந்தனர். மயிலையில் ஜைனர்களே மலிந்திருந்தனர் என்பதைப் பண்டைய நூலாகிய தோத்திரத் திரட்டில் "மயிலாப்பூர் பத்து" என்னும் பதிகத்தில்,

"ஒளிதரு தண்ணிழல் குலவியோ ரோசனையுயரமோ ரோசனையில்
களிதரு நாண்மலரணியும சோகுடையரி குலநாயகரூர்
விளிதரு மூடமும் வினையும் விடாமயல் வீடருநால் வகையிற்
றெளிதரு சாவகர் செழுமனையேமலி திருமயிலாபுரியே"

எனவரும் தோத்திரப் பாவின் கடைசி வரியால் விளங்கு கிறது. இதனால் மயிலாப்பூரில் சாவகர்கள் (நயினார்கள்) சிறப்பாகவும் செழிப்பாகவும் வாழ்ந்திருந்தனர் என்பதையும் அறிகின்றோம். அந்'' நயினார் '' பட்டம் தமிழகத்தில் வாழும் ஜைனர்களிடம் இன்றும் சிறப்பாக வழங்கி வருகிறது. ஜைன சமயத்தினின்றும் வேறு சமயம் புகுந்தவர்களும் தங்கள் பண்டைய நயினார் பட்டத்தைத் துறக்கவில்லை என்ற உண்மையை இன்றும் காணலாம், குறிப்பாக நீறுபூசி வேளாளர்களும், நெல்லிக்குப்பம், பண்ருட்டி, செஞ்சி, ஆரணி பகுதிகளில் காப்பலூர். கலசப்பாக்கம் கிராமங்களில் வசிக்கும் பல வேளாளர்களும் பண்டைய நயினார் பட்டத்தைய வைத்துக் கொண்டுள்ளார்கள். தென்னாட்டு முஸ்லீம்களில் பெரும்பாலோருக்கும் நயினார் பட்டம் வழங்குகிறது. அவர்களும் ஜைனர்களாயிருந்து மாறியவர்கள் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவில் ஆழ்வார் திருநகர், ஸ்ரீவைகுண்டம், தென்காசி போன்ற பகுதிகளில் உள்ள சைவ சமயத்து வேளாளர்கள் தங்கள் பெயருக்குப் பின்னால் நயினார் பிள்ளை எனத் தங்கள் பண்டைய சமயப் பெயரை விடாது அமைத்துக்கொண்டுள்ளார்கள் மேலும் தமிழகத்தின் பல பாகங்களில் நயினார் குளம், நயினார் மண்டபம், நயினார் மேடு, நயினார் குப்பம் என வழங்குவதைக் காணலாம். அவைகள் யாவும் ஜைனர்கள் வாழ்ந்த இடங்களேயாகும்.

இத்தகு சான்றுகளால் மயிலாப்பூரில் வாழ்ந்து வந்த நயினார்கள் வழிபாடியற்றிய திருக்குறளாசியர் நாயனார் கோயிலே இன்று திருவள்ளுவர் கோயில் என அழைக்கப்படுகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## அத்திருவடிகள் எங்கே?

பண்டைய காலமுதல் திருக்குறளாசிரியரின் திருவடிகளை வணங்கிவந்த நயினர்கள் (ஜைனர்கள்) மயிலாப்பூரில் பிற்காலத்தில் அருகிவிட்டார்கள். அங்குள்ள கோயில்களும், சின்னங்களும் மறைக்கப்பட்டும், மாற்றப்பட்டும், அழிக்கப்பட்டும் போயின. இது மறுக்கவியலாத வரலாற்றுண்மை! இந்நிலையில் சுமார் 100 அல்லது 120 ஆண்டுகளுக்கு முன்னர் திருக்குறளாசிரியருக்கு உருவச்சிலை வைப்பதாகக் கூறித் தாடி மீசை சடையுடன் கூடிய உருவச்சிலையைச் செய்துவந்து திருக்குறளாசிரியர் திருவடிச் சின்னங்களுக்குப் பின்னே மூலவராக அமைத்தார்கள். அதற்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர் அத்திருவடிச் சின்னத்தைப் பெயர்த்தெடுத்து மறைத்துவிட்டார்கள்.

இவ்வடாத செயலைக்கண்ட அங்குள்ள பொது மக்கள் அர்ச்சகரையும் அவ்வாறு செய்ததற்குக் காரணமாய் இருந்தவர்களையும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். இவ்வெதிர்ப்பின் வேகத்தை அறிந்த அர்ச்சகர்கள் அச்சின்னத்தைச் சிதைத்துச் சில மாறுதல்களுடன் உள் கோவிலை விட்டு வெளியே மண்டபத்தில் வைத்தார்கள். இவ்வாறு சில காலம் அம்மண்டபத்திலேயே இருந்தது. என்றாலும் அவ்வர்ச்சகர்கள் அத்திருவடிகள் அங்கிருப்பதில் வெறுப்பே கொண்டிருந்தனர். அதற்குக் காரணம் அங்கு வருபவர்கள் அத்திருவடிகளையும் தொழுது வந்தார்கள். அதனால் சில ஆண்டுகள் கழித்து அச்சின்னத்தை அக்கோயிலின் மதிற்சுவரில் வைத்து மூடிவிட்டார்கள். அதனை அறிந்த பொது மக்கள் எதிர்க்கவே புதைத்த இடத்தி

லேயே திறந்து வைத்துவிட்டார்கள். இக்கிளர்ச்சிக ளெல்லாம் ஜைனரல்லாத அப்பகுதிப் பொது மக்களா லேயே நடந்தது. ஏனெனில் அவர்கள் பல காலமாக அத்தேவர் திருவடிகளைத் தொழுது வந்த உரிமையாலும் அன்பாலும் ஆகும். ஜைன சமயத்தவர் வழிபடும் சின்னம் என்பதற்காகவும், திருக்குறளாசிரியரின் சிறப் புப் பெயராகிய திருவுள்ள நாயனுர் என்னும் பெயர் மாறித் திருவள்ளுவர் என வழங்குவதை நிலை நிறுத்தவுமே இச்சதிச் செயல் நடந்ததெனில் மிகை யாகாது.

இவ்வரலாற்றைச் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னர் அந்நயினர் கோயிலின் எதிர் வீடுகளில் வசித்து வந்த வயது முதிர்ந்தோரின் வாயிலாகக் கேட் டறிந்தேன். இச்செய்தியைத் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களிடத்தும், பேராசிரியர் எ. சக்கர வர்த்தி நயினர் அவர்களிடத்தும் நான் தெரிவித்தேன். அப்பெரியார்கள் இருவரும் வியப்புற்று அங்கு சென்று கோயிலின் எதிர்வீட்டு வாயிற்படியில் நின்றிருந்த முதியோரை விசாரித்து உண்மையை அறிந்தார்கள். பின்னர் 1945-ஆம் ஆண்டில் இக்கட்டுரையின் தலைப் பில் உள்ளது போன்று திருக்குறள் ஆசிரியரின் திரு வடிகளைப் படமாக வரைந்து 'ப்ளாக்' செய்து ஒரு பிர சுரம் வெளியிட்டேன். 1947-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 16-ம் நாள் மயிலாப்பூர் குயப்பேட்டை வீரப்பெருமாள் தெருவில் மயிலைத் திருவள்ளுவர் கழகத்தின் ஆண்டு விழா நடைபெற்றது. அவ்விழாவில் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் வற்புறுத்தலின்பேரில் யான் தலைமை வகித்தேன். எனது தலைமையுரையில் அக் கோயிலின் வரலாற்றைப் பேசுமாறு தமிழ்ப்பெரியார்

பணித்தார்கள். அவ்வாறே மேலே குறிப்பிட்ட வரலாற்றை விளக்கிப் பேசினேன். இதனைக் கேட்ட அறிஞர் பெருமக்களும், பொதுமக்களும் வியப்புற்றனர். அது மட்டுமல்ல! பண்டைக்கால மதக்காழ்ப்பின் போக்கினை எண்ணி எண்ணித் திகைத்துவிட்டார்கள். கூட்டம் முடிவடைந்ததும் அவ்விழாவில் சொற்பொழிவாற்றிய அறிஞர் பெருமக்களான தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள், பன்மொழிப்புலவர் டி. பி. மீனாட்சி சுந்தரனார் அவர்கள், தமிழ் அறிஞர் ரெவரெண்ட் அருள்தங்கையா அவர்கள், எஸ். லக்ஷ்மிரதன் பாரதியார் பி.ஏ., பி.எல். அவர்கள், திரு கே. அன்பழகன், எம்.ஏ. அவர்கள் ஆகிய அறிஞர்களும், புலவர்களும் திருவள்ளுவர் கோயிலுக்குச் சென்று பார்வையிட்டார்கள். யான் பொதுக்கூட்டத்தில் விளக்கியவாறே மதிற்சுவரில் வைத்துள்ள திருவடிச் சின்னத்தைக் கண்டு முற்றும் உண்மை உண்மை என உள்ளம் பூரிக்கப் பேசிக் கொண்டார்கள். அது மட்டுமல்ல; அங்கு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அவ்வீதி மக்களில் ஒரு வயது முதிர்ந்த அம்மையாரை நோக்கி இது என்ன கோயில் எனக் கேட்டார்கள். உடனே அக்கிழவி, நயினார் கோயில் எனப் பகர்ந்தார். எதிர்பாராத இவ்விடையைக் கேட்டதும் புலவர்களும், பொது மக்களும் கைக்கொட்டி மகிழ்ந்தார்கள். அவர்கள் அனைவரும் என்னை நோக்கித் தாங்கள் கூறியவாறு நயினார் கோயில் என்பது மறுக்கவியலாத வரலாற்று உண்மை எனப் பாராட்டினர். திருக்குறளாசிரியர் தேவர் திருவடிச் சின்னத்தை அகற்றித் திருவள்ளுவர் உருவச் சிலையெனக் கற்பனையாகச் சில ஆண்டுகளுக்கு முன அமைத்தும் தொன்றுதொட்டுவரும் நயினார் கோயில்

என்ற பெயரும் தேவர் திருவடிச் சின்னமும் அம்மக்கள் உள்ளத்தினின்றும் அகலாது நின்று நிலவுகிறது என்றும் வியந்து பேசினர்கள். இத்தகு அகச்சான்று களாலும் புறச்சான்றுகளாலும் உண்மை கண்ட நாம் பண்டைய வரலாற்றுச் சின்னத்தை நிலைநாட்ட முற்படவேண்டும். இதனால் நமது ஆசிரியர்களாகிய அறவோர்கள்பால் நாம் கொண்டிருக்கும் மதிப்பையும், பக்தியையும் உலகோர் கண்டு வியப்பர். உயர்ந்தோர் திருவடிகளை வணங்கும் நமது பண்பும் எந்நாளும் அழியாது வழி வழி வளரும்.

ஆகவே நமது பாரத அரசியலரால் வெளியிடப் பட்டதும், நமது சென்னை அரசியலாரைக் கலந்து வரையாததுமாகிய திருக்குறளாசிரியரின் திருவுருவப் படத்தைப் பெரும்பாலான தமிழ் அறிஞர்கள் ஏற்காததும் பலரும் அறிந்ததே. " மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்த தொழித்துவிடின் " எனத் திருக்குற ளாசிரியர் எவைகளை வேண்டா என வெறுத்தாரோ அவைகளையே அவர் தலையில் வலிந்து சுமத்தியது போன்ற உணர்ச்சியே நமது உள்ளத்தில் உருவாகிறது.

இந்நிலையில் தமிழ் மக்கள் பலரும் சமய, சாதி, அரசியல் கட்சி நோக்கங்களை மறந்து, " ஒன்றாக நல்லது கொல்லாமை " என்னும் அருட்கொடியைத் தாங்கி நிற்கும் நமது தேவர் பெருமானைப் பண்டைய காலச் சான்றோர்கள் வழிநின்று அவ் அறவோரின் திருவடிகளையே சிலையாகச் செய்து வாழ்த்தி வணங்கு வோமாக.

---

இக்கட்டுரை ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவையின் நான்காவது ஆண்டு மலரில் வெளிவந்தது.

**ஜைன அறவோர்கள் இயற்றியருளிய இலக்கியங்கள் யாவும்**
**உலகுக்கே உணர செய்த பொது நூல்கள் என்ற**
**உண்மையை விளக்கும்**
**அரிய ஆராய்ச்சி நூல்கள்**



1. இளங்கோவடிகள் சமயம் யாது?
2. பகுத்தறிவியக்கத்தின் பழமை.
3. ஆதிபகவனும் ஆச்சாரிய விநோபாஜீயும்.
4. எம்மான் கோயில்.
5. சமணர் மலை செல்வோம்.
6. திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்.
7. நாலடியார் கடவுள் வாழ்த்தில் காணும் வானவில் ஆராய்ச்சி.
8. நில உடமை உச்சவரம்புக் கொள்கை நமது பண்டைய நாகரிகமே.
9. பாலிடாணு யாத்திரை.
10. சட்டம் பேசுகிறது.
11. ஊன் உணவைத் துறந்த உத்தம வேடனும் மரக்கறியின் மாண்பும்.
12. ஜைன சமயத்தின் தொன்மையும் தன்மையும்.

**ஜைன இலக்கிய ஆராய்ச்சி மன்றம்**
34, சுப்பிரமணிய முதலி வீதி,
சென்னை-1.

அருட்பெருஞ்ஜோதி அச்சகம், சென்னை-1.